# இயலிசை


தனி பிரதி விலை 50 காசுகள்

ஆண்டு சந்தா ரூ 10/-

அரையாண்டு சந்தா ரூ 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்

துணை ஆசிரியர் :
V. தமிழ்ராசன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-24

மலர் 1 1-9-82 இசைக்கலை உலக தமிழ் மாதமிருமுறை இதழ் 8, 9


## சென்னையில் அருணகிரிநாதர் விழாக்கள்

வடபழநி திருப்புகழ்சபை

ஆகஸ்டு 15ந் தேதி சுதந்திர தினத்தன்று திருவண்ணாமலையில் அருணகிரிநாதர் உற்சவம், திருப்புகழ் விழா கொண்டாடப்படுவது அறிந்ததே. அதே தினத்தன்று சென்னையிலும் வடபழநி திருப்புகழ் சபையினர் வடபழநி ஆண்டவர் ஆலயத்தில் அருணகிரிநாதர் விழா நடத்துகின்றனர். இவ்வாண்டு மூன்று நாட்கள் விழா சிறப்பாக நடந்தது. மதுரை S. சோமசுந்தரம், D. K. ஜெயராமன், திருவாரூர் சேதுராமன், லிங்கப்பன், தஞ்சாவூர் சங்கரய்யர், செங்கல்பட்டு ரங்கநாதன், T. K. கோவிந்தராவ், சிதம்பரம் மீனாட்சிசுந்தரம் மற்றும் பலர் பாடினர். திருச்சேறை சிவசுப்ரமணியம் பிள்ளை நாதசுர கச்சேரி செய்தார். ஸ்ரீ தங்கசாலை ஓம் கங்கை விநாயகர் அருள்நெறித் திருக்கூட்டத்தில் இவ்வாண்டு தங்க சாலை திருமண மண்டபத்தில் திருமுறை திருப்புகழ் விழா நடத்தினர். தருமபுரம் சுவாமிநாதன், புலவர் E. அருணகிரி, காஞ்சிபுரம் விநாயக முதலியார், வலைகுடி M. சுவாமிநாதன் உட்பட பல திருமுறை இசைவாணர்கள் கலந்து பாடினர். டாக்டர் P. S. C. மணி அடியார் திருக்கூட்ட இறைபணி மன்றம் இசை ஏற்பாடுகளைச் செய்திருந்தார்.

இரண்டு விழாக்களிலும் திருப்புகழ் அன்பர்கள் பலர் கலந்து மகிழ்ந்தனர்.

## T. இராஜேந்தருக்கு தங்க இசைத்தட்டு நடிகர்திலகம் வழங்கினர்

'கிளிஞ்சல்கள்' பட வெற்றி விழா 210-வது நாளன்று சென்னையில் நடந்தது. இதில் படத்தின் இசையமைப்பாளர் T. இராஜேந்தருக்கு AVM இசைத்தட்டு நிறுவனம் சார்பில் பாராட்டி தங்க இசைத்தட்டு வழங்கப்பட்டது. சிவாஜி கணேசன், M. P. இசைத்தட்டினை வழங்கி பாராட்டினர்.

'கிளிஞ்சல்கள்' படம் வெற்றிக்கு T. இராஜேந்தர் இசையும் முக்கிய காரணம். 'சின்ன சின்ன கண்ணு' என்ற பாடல் சிறு குழந்தைகள் கூட பாடுவதைக் கேட்கலாம். இவர் கதை, வசனம் டைரக்ஷன் என்று சிரமம் எடுத்துக்கொண்டு தனது ஒரு கலைக் காதலை விளம்பரப்படுத்திக் கொண்டிருப்பதை விட்டு முழு இசையமைப்பாளராக ஒரு வேளை மாறிவிட்டால் விரைவில் தமிழகத்தில் சிறந்த இசையமைப்பாளராக திகழ்வார் என்பது உறுதி.

## சன்மார்க்க அன்பர்களுக்கு அரிய வாய்ப்பு

திரு அருட்பா திரட்டு இசைச்சுட்டி (காசெட்)

வடிவில் அய்யாவின் மூவர்ண முகப்புடன்

வெளிவந்துள்ளது!

### 'திருஅருட்பா தேனிசை'

பாடியவர் : சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்

இசை : ஸ்ரீகுமார்

விலை ரூ. 35/- தபால் செலவு உட்பட இயலிசைக்கு அனுப்பி தபால் மூலம் இசைச்சுட்டி பெறலாம்.



## இயல் இசை நாடக மன்ற கலைஞர்கள் ஊக்கத் திட்டம் திருச்சியிலும் நேர்முகத் தேர்வு

வருடா வருடம் இயல் இசை நாடக மன்றம் தகுதி வாய்ந்த கலைஞர்களுக்கு இசைச்சபைகளில் சில வாய்ப்புகளை வழங்கி ஊக்குவிப்பதும்; இசை, நடன பள்ளிகளுக்கு உதவித்தொகை வழங்கி வளர்ப்பதும் தெரிந்ததே. இதற்கான கலைஞர்கள் நேர்முகத் தேர்வு சென்னையில் மட்டும் இதுவரை நடந்து வந்தது. இவ்வாண்டு முதல் திருச்சியிலும் நடக்க உள்ளனர்.

இத்திட்டம் மூலம் பயன்பெற விரும்பும் கலைஞர்கள், இசைச் சபைகள், இசை நடன பயிற்சி நிலையங்கள் திட்ட விதிமுறைகளையும், விண்ணப்ப பாரங்களையும் செயலாளர், இயல் இசை நாடக மன்றம், சென்னை-28 என்ற முகவரிக்கு எழுதி பெற்று 15-9-82 தேதிக்குள் பூர்த்தி செய்து அனுப்பவும்.

## 'இயலிசை' ஆதரவாளர் பொள்ளாச்சியார் இல்லத்திருமணம்

தொழில் அதிபரும், சென்னை இராமலிங்கப் பணிமன்ற தலைவரும், தமிழிசை வளர்ச்சியில் ஆர்வமும் கொண்ட அன்பர் பொள்ளாச்சி நா. மகாலிங்கம் அவர்கள் மகன் செல்வன் மாணிக்கத்திற்கும், ஏ. வி. கிரி அவர்களின் செல்வி கௌரி மனோகருக்கும் செப்டம்பர் 2ந் தேதி பொள்ளாச்சியில் திருமணம் நடக்கின்றது. 8-9-82 அன்று மாலை சென்னை AVM இராஜேசுவரி திருமண மண்டபத்தில் வரவேற்பு விருந்து நடக்கின்றது. K. J. ஜேசுதாசு குழுவினர் இன்னிசையும் நடைபெறும். மணமக்களுக்கு வாழ்த்துகள்!

## திரைப்பட பாடலாசிரியர் முல்லை மணிக்கு 'கவிஞர் பட்டம்' தூத்துக்குடி 'இன்ப இரவில்' வழங்கினர்

தூத்துக்குடி மாதா கோவில் கலையரங்கில் திரைப்பட நடிகை ஜெயமாலா நடன நிகழ்ச்சிகளை இன்ப இரவு என்று நடத்தினர். இதில் தூத்துக்குடி நகர பிரமுகர்கள் வக்கீல் D. A. தெய்வநாயகம், R. சுந்தரராசன், ARA இராசதுரை, K. S. மனோகர், வயன S. தனராஜ் ஆகியோர் கலந்து கொண்டனர். அப்போது 'ஒருமரம் பூ பூத்தது' மற்றும் சில படங்களுக்கு பாடல்கள் எழுதிய முல்லைமணி அவர்களுக்கு தூத்துக்குடி பிரபல மெர்க்கண்டைல் பாட்கருமான AWD தலைவர் பொன்னுதுரை போர்த்தி 'கவிஞர்' என்ற பட்டம் வழங்கினர். அரசர் V. காசி கலைஞர் அனைவருக்கும் மாலையணிவித்து நன்றியுரை ஆற்றினர்.

## நவராத்திரி விழா நடத்துபவர்களுக்கு...

புரட்டாசியில் இவ்வருடம் இரண்டு அமாவாசை வருவதால் நவராத்திரி விழா எப்பொழுது நடத்தலாம் என பல விழா குழுவினர் யோசனை செய்வதாக அறிகின்றோம். ஆகம விதிப்படி பின்னே வருவதைத்தான் எடுத்து கொள்ள வேண்டும். பெரும்பாலும் திருக்கோவில்களிலும் அக்டோபர் 82 மாதத்தில்தான் நவராத்திரி கொண்டாட இருக்கின்றனர். எனவே அக்டோபரில் விழா ஏற்பாடுகளைச் செய்யுங்கள். மழைக்காலமாக இருக்கலாம். எனவே பந்தலும், மேடையும் மழையையும் தாங்கும்படி போடுங்கள். அல்லது மண்டபங்களில் நடத்துங்கள்.

கலைவிழா விபரங்களை 26-9-82 தேதிக்குள் இயலிசைக்கு அனுப்பினால் பிரசுரிக்க உள்ளோம்.

## லண்டனில் இந்திய கலைவிழா லால்குடி ஜெயராமன் கச்சேரி

பிரபல வயலின் மேதை லால்குடி ஜெயராமன் லண்டனில் நடைபெற்ற இந்தியக் கலைவிழாவிற்கு இந்திய அரசின் சார்பில் சென்று அரசி எலிசபத் கலை அரங்கில் வயலின் நிகழ்ச்சி நடத்தினர். நிறைய வெளிநாட்டினர் ரசித்தனர். தவிர அவர் ஜெர்மனி, மிலான், சோலோன், பிராங்பர்ட் ஆகிய இடங்களிலும் கச்சேரிகள் செய்து சென்னை திரும்பினர். சென்னையில் நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் அவர் கர்நாடக இசைக்கு மேலைநாடுகளில் நல்ல வரவேற்பு உள்ளது என தெரிவித்தார்.

மேலும் அவர் அளித்த பேட்டியில் வடநாட்டு கலைஞர்கள் அடிக்கடி வெளிநாடு செல்வதால் இந்துஸ்தானி இசை புகழ் பெற்றுள்ளது; தென்னகக் கலைஞர்களையும் அரசாங்கம் நிறைய அனுப்ப வேண்டும் என்றார்.

## இளையராஜாவுக்கு சென்னை சினிமா ரசிகர் சங்க விருது

கடந்த 30 ஆண்டுகளாக சென்னை சினிமா ரசிகர் சங்கம் வருடந்தோறும் திரைப்படக் கலைஞர்களைத் தேர்ந்தெடுத்து பரிசுகள் வழங்கி வருகின்றனர். இவ்வருடம் அவர்கள் பரிசளிப்பு விழாவினை அக்டோபர் 10ந் தேதி சென்னை பல்கலைக் கழக நூற்றாண்டு மண்டபத்தில் கொண்டாட உள்ளனர். 1981 வருட சிறந்த இசையமைப்பாளராக இளையராஜாவையும், பாடல் ஆசிரியராக கவிஞர் வைரமுத்துவையும், பாடகர்களாக S. P. பாலசுப்ரமணியம், ஜானகி இவர்களையும் தேர்ந்தெடுத்து உள்ளனர். அனைவருக்கும் எங்கள் வாழ்த்துக்கள்.

## சென்னையில் ஆந்திர நா. சு. கலைஞர் நிகழ்ச்சி 'நாகஸ்வராளி' ஏற்பாடு

நல்ல நாதசுர இசை நிகழ்ச்சிகள் மட்டுமே நடத்திவரும் சபை 'நாகஸ்வராளி' இவர்கள் ஆந்திராவில் பிரபலமாக விளங்கும் ஷேக் மெஹபூப் சுபானி அவர் மனைவி திருமதி காஸிம் பேகம் இவர்களது நாதசுர இசை நிகழ்ச்சியை முதன் முதலில் சென்னையில் ஏற்பாடு செய்து சென்னை ரசிகர்களுக்கு அறிமுகம் செய்கின்றனர். இந்நிகழ்ச்சியை இவர்களும் மயிலாப்பூர் பைன் ஆர்ட்ஸ் கிளப்பும் சேர்ந்து வரும் 16-9-82 மாலை 6 மணிக்கு மயிலாப்பூர் பைன் ஆர்ட்ஸ் கூடத்தில் நடத்த உள்ளார். நாதசுர கலைஞர்களுக்கு நல்ல ஆதரவு தரும் இச்சபைக்கு 'இயலிசை' வாழ்த்துக்கள்' இவர்கள் முகவரி

'நாகஸ்வராளி'
தபால் பெட்டி எண். 902
மந்தைவெளி, சென்னை-28

## கிருஷ்ணகான சபை இசை விழா
## ஆந்திர மேதை 'படேகுலாம் அலிகான்'
## வோலட்டி வெங்கடேசுவரலுவைப் பாராட்டி செம்மங்குடி பேச்சு

சென்னை ஸ்ரீ கிருஷ்ணகான சபையின் 27வது வருட கோகுலாஷ்டமி இசை விழா கடந்த 7-8-82 அன்று தியாகராயநகர் கான விஹார் மண்டபத்தில் துவங்கியது அமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் துவக்கி வைத்து பேருரையாற்றினார். செம்மங்குடி சீனிவாச அய்யர் தலைமை வகித்து இசைக்கலைஞர் வோலட்டி வெங்கடேசுவரலு அவர்களுக்கு 'சங்கீத சூடாமணி' விருதினை வழங்கினார். இவர் விஜயவாடா வானொலி நிலையத்தில் பல ஆண்டுகளாக இசை நிகழ்ச்சி தயாரிப்பாளராக பணியாற்றி வருபவர். மணியான குரல் கொண்டவர். ராகம் ஆலாபனை நீண்ட நேரம் செய்வார். ஆந்திர சபைகளிலும் பம்பாயிலும் பல விருதுகள் பெற்றவர். இவர் பெருத்த சரீரமும், கனத்த சாரீரமும் கொண்டவர். இவரைப் பாராட்டி பேசும் பொழுது செம்மங்குடி சீனிவாச அய்யர் வடமாநிலத்தில் புகழுடன் விளங்கி மறைந்த பெரும் இசை மேதை 'படேகுலாம்' அலிகானுடன் இவரை ஒப்பிட்டு பேசியதும் சபையினர் கை தட்டினர். மற்றும் இவரைப் பாராட்டி லால்குடி G ஜெயராமன் R. வேணுகோபால் ஆகியோர் பேசினர் சபா செயலாளர் யக்ஞராமன் நன்றி தெரிவித்தார்.

கோகுலாஷ்டமி இசை விழா தொடர் ஆகஸ்டு செப்டம்பர் 82 இருபாதங்களிலும் நடைபெற்று வருகின்றது. ஏராள புகழ்மிக்க இசைக்கலைஞர்கள் பாடுகின்றனர்.

## மிருதங்கக் கலைஞர் மூர்த்திக்கு பாராட்டு விழா

மிருதங்கக் கலைஞர் T. K. மூர்த்தி கடந்த 50 ஆண்டுகளாக வாசித்து வருகின்றார். தமிழக முன்னணி கலைஞர்கள் அனைவருக்கும் வாசித்துள்ளார். அவரது சேவையினை பாராட்டி சென்னை நகர சபாக்கள் குழு Federation மயிலை சீனுவாச சாஸ்திரி கூடத்தில் அறநிலைய அமைச்சர் R. M. வீரப்பன் தலைமையில் விழா நடத்தினர். மூர்த்தியவர்களைப் பாராட்டி செம்மங்குடி சீனுவாச அய்யர் சீர்காழி கோவிந்தராசன் T. M. தியாகராசன், R. கிருஷ்ணசாமி B. V. இராமன், C. S. முருகபூபதி, மற்றும் பலர் பேசினர் அவருக்கு இயலிசை வாழ்த்துக்கள்.



## இயலிசை இதழ் மூலம்

மலேசியா செல்லும் கலைக் குழுவினருடன் செல்ல பெண் நடனக் கலைஞர்கள் தேவை விருப்பமுள்ளவர் இயலிசை விலாசத்திற்கு கடிதம் மூலம் தொடர்பு கொள்ளவும்.

—ஆசிரியர் 'இயலிசை' சென்னை-24

## சீர்காழி(யில்) கோவிந்தராசனுக்கு பட்டம் வாரியார் சுவாமி வழங்கினர்

சீர்காழி திருக்கோலக் காவில் உள்ள ஆலய திருப்பணிக்காக திருமுருக கிருபானந்தவாரியார் தொடர் இசைச் சொற்பொழிவு நடந்து வந்தது. அதில் சீர்காழி கோவிந்தராசன் அவர்களும் கலந்து கொண்டார். அப்போது சீர்காழி நகர பொதுமக்கள் சார்பில் அவருக்கு கிருபானந்த வாரியார் பொன்னாடைபோர்த்தி 'ஏழிசை ஞான ஜோதி' என்ற பட்டம் பொறிக்கப்பட்ட சின்னத்தை கொடுத்தார். சீர்காழி சட்டமன்ற உறுப்பினர் தமிழ் நாடு சுற்றுலா வாரிய தலைவர் கே. பாலசுப்ரமணியம், இரா. வைத்தியநாத முதலியார், சி. சுப்பையா முதலியார் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர்.

## சென்னை தமிழ் இசை சங்கத்துக்கு ரூ. 10 ஆயிரம் ஆஸ்திரேலியா தமிழ் சங்கம் கொடுத்தது

ஆஸ்திரேலியாவில் உள்ள சிட்னி தமிழ் சங்கம் சென்னை தமிழ் இசை சங்கத்துக்கு ரூ. 10 ஆயிரம் அன்பளிப்பாக கொடுத்து உள்ளது.

இந்த அன்பளிப்பை முதலீடு செய்து அதன் மூலம் கிடைக்கும் வட்டி வருமானத்தைக் கொண்டு தமிழ் இசைக் கல்லூரியில் மிகச் சிறந்த மாணவருக்கு ஆண்டுதோறும் பரிசு வழங்கலாம். அல்லது உதவித் தொகை அளிக்கலாம். என்று அந்த சங்கம் குறிப்பிட்டு உள்ளது.

மேற்கண்ட தகவலை சிட்னி தமிழ் சங்க துணைத்தலைவர் டாக்டர் ரவீந்திரநாத தெரிவித்தார்.

## வீனஸ் காலனியில் தமிழிசை முழக்கம்! இசைச்சித்தருக்கு 'நாதக்கனல்' பட்டம்

'நாதக்கனல்' என்ற இசைச் சபை பாரதி நூற்றாண்டு இசை விழாவினை சென்னை வீனஸ் காலனி ஆஸ்திக சமாஜத்தில் ஆகஸ்டு 11 முதல் 16 வரை நடத்தினர். விழாவில் 'நாதக்கனல்' என்ற பட்டத்தை கீழ்க்கண்ட கலைஞர்களுக்கு வழங்கினர்,

பாடகர்கள் இசைச்சித்தர் சிதம்பரம் ஜெயராமன், K. V. நாராயணசாமி, D. K. ஜெயராமன், K. J. ஜேசுதாஸ், மதுரை N. கிருஷ்ணன், திருமதி சுலோசனா பட்டாபிராமன், R. M. சுந்தரம்.

பிடில் கலைஞர்கள் T. N. கிருஷ்ணன், M. S. அனந்தராமன், M. சந்திரசேகரன்

மிருதங்கம் T. K. மூர்த்தி வேலூர் இராமபத்திரன, உமையாள்புரம் சிவராமன்,

கடம் R. S. கிருஷ்ணமூர்த்தி ராவ் விழாவில் விருது பெற்ற கலைஞர்களும், மற்றும் பல கலைஞர்களும் கலந்து பெருவாரியாக மகாகவி பாரதி பாடல்களைப் பாடினர், விழா ஏற்பாடுகளை பத்தமடை கிருஷ்ணன் இசைக்கலைஞர் செய்திருந்தார்

## பசு 'இசை'யுமா ?

இசைக்கு பசு, சிசு, நாகம் கட்டுப்படும் என்பது பழமொழி அதனை ஆராயும் வகையில் திருப்பதி-திருமலை தேவஸ்தான நிர்வாகிகள் கடந்த கோகுலாஷ்டமி அன்று அவர்கள் பால் பண்ணையில் பல்வேறு இடங்களில் ஒலிபெருக்கிகள் அமைத்து பால் கரக்கும் வேளைகளில் நல்ல இசை தன்னை ஒலி பரப்புகின்றனர், அவ்வேளையில் நல்ல இசையைக் கேட்டால் நிறைய பால் கறக்கும் என்று எண்ணுகின்றனர். ஏற்கெனவே பதிவு செய்யப்பட்ட குழல், வயலின், நாதசுரம் முதலிய இசைக்கருவிகளின் இசையை மட்டும் ஒலிபரப்புகின்றனர். அந்த இசைக்கு இசைந்து எந்தளவுக்கு பசுக்கள் அதிகம் பால் கொடுக்கின்றன என்பதனை விரைவில அறிவார்கள்.

(தகவல் : சித்ரதன்)

## திருவாரூர் ரேணுகாதேவி அம்பாள் கோவில் உற்சவம திருப்பனந்தாள் சகோதரிகள் கச்சேரி

திருவாரூர் எல்லையம்மன் ரேணுகாதேவியம்மன் கோவிலில கடந்த ஆடி மாதம் உற்சவத்தில் திருப்பனந்தாள் சகோதரிகள் T. V. சுசீலா, M.A, T. V இந்திரா இசை நிகழ்ச்சி நடத்தினர். நிகழ்ச்சியில கர்நாடக இசை தமிழிசை மெல்லிசை பக்தி பாடல்கள் அனைத்தும் கலந்து பாடி ரசிகர்களை நிறைவு செய்தனர் நிகழ்ச்சிக்கு திருவாரூர் சந்தானம் - வயலின் திருப்பனந்தாள் து. வெங்கட்ராமன் மிருதங்கம், திருப்புகலூர் S. வெங்கட்ரமணி - கடம் தரம்பட வாசித்து சிறப்பு செய்தனர்.

(தகவல்: திருப்புகலூர் S. வெங்கட்ரமணி, மிருதங்கம், கடம் கலைஞர்)



## அருள்திரு
## தேவி கருமாரியம்மன்
## திருக்கோயில்
திருவேற்காடு, சென்னை-77

### ஆடிப்பெருவிழா கலை நிகழ்ச்சிகள்

5—9—82 காலை 6 மணி V S. பூமிநாதன் குழுவினர் இன்னிசை
இரவு 7 மணி N C. சௌந்தரவல்லி ,,
12—9—82 சுப்பு ஆறுமுகம் குழுவினர் வில்லுப்பாட்டு
19—9—82 M S விசுவநாதன் ,, மெல்லிசை
26—9—82 T K S. கலைவாணன் குழுவினர் இன்னிசை
9—10—82 G. முத்துராசா குழுவினர் இன்னிசை

## திருத்தணிகை
## தெப்பத்திருவிழா கலை நிகழ்ச்சிகள்

திருத்தணிகையில் ஆடிக்கிருத்திகையில் மூன்று நாட்கள் தெப்பத்திருவிழா வருடந்தோறும் நடைபெறும். இவ்வருடம் இவ்விழாவில் சிறப்பு கலை நிகழ்ச்சிகளும் இடம் பெற்றன. திருப்பாம்புரம் நாதசுர இளங்கலைஞர்கள் T K. S. சுவாமிநாதன், T K. S. மீனாட்சிசுந்தரம் முதல்நாள் மங்கள இசை. கீழ்வேளூர் K. R. கோவிந்தராசன் தவிலுடன் வழங்கினர். மறுநாள் மதுரை S. சோமசுந்தரம் கச்சேரியும், இறுதிநாள் குன்னக்குடி வைத்ய நாதன் வயலின் கச்சேரியும் நடைபெற்றன. ஏராள ரசிகர்கள வந்திருந்தனர். கலை நிகழ்ச்சி ஏற்பாடுகளை கோவில் உதவி ஆணையர் க. நாகராசன் செய்திருந்தார். இவர் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்தவர். கலை நிகழ்ச்சிகளில் ஆர்வம் உடையவர். வரும டிசம்பர் 31 திருத்தணி படிவிழாவினை பெரும் இசை விழாவாக நடத்த உள்ளனன என நமது 'இயலிசை' ஆசிரியரிடம் தெரிவித்தார். வாழ்க அவரது ஆர்வம்! வளர்க அவரது தொண்டு.

## அந்தமான் திருப்புகழ் சபையின் ஆறும் ஆண்டு விழா
## போர்ட் பிளேயரில் நடந்தது

இந்தியாவைச் சேர்ந்த அந்தமான தீவின் தலைநகரான போர்ட் பிளேயரில் வசிக்கும் தமிழர்கள் ஆறு ஆண்டு காலமாக திருப்புகழ் சபை ஒன்றினை நடத்தி வருகின்றனர். இதன் ஆண்டு விழாவினை திருவெற்றி மலை முருகன ஆலயத்தில் கடந்த ஆனி மூல நட்சத்திர தினத்தன்று சிறப்பாக கொண்டாடினர். அந்தமான் அபி விருத்தி ஆணையாளர் R. பத்மநாபன, IAS கலந்து 'கந்தன் அருட்பாமாலை' என்ற விழா மலரினை வெளியிட்டார், திருமதி பாமா புருஷோத்தமன் கச்சேரி நடந்தது. அவருக்கு சித்தூர் V தியாகராசன் வயலின், கும்பகோணம் A. பிரேம்குமார் மிருதங்கம், கோபால் நாயர் கஞ்சிரா வாசித்தார்கள். ராகவ ராமன் புல்லாங்குழல் கச்சேரியும், ஹேமமாலினி வயலின், நாராயணன மிருதங்கம் வாசிக்க நடைபெற்றது. விழாவிற்கான ஏற்பாடுகளை சபை செயலாளர் R. புருஷோத்தமன் செய்து ஒத்துழைப்பு தந்தவர்களுக்கு நன்றி தெரிவித்தார்.

## ரசிக ரஞ்சனி சபா, மயிலை
### கலைவிழா 1982

மாலை 6-30 மணி

7—9—82 T. V. சங்கர நாராயணன் பாட்டு
T. N. கிருஷ்ணன், பிடில்
T. K மூர்த்தி, மிருதங்கம்

16—9—82 குமாரி செல்வி, பரதநாட்டியம்
(ஆசிரியை : திருமதி ஜெயலட்சுமி அருணாசலம்)

18—9—82 B. இராஜம் அய்யர், பாட்டு
M. சந்திரசேகரன், பிடில்
உமையாள்புரம் சிவராமன், மிருதங்கம்

21—9—82 M S. கோபாலகிருஷ்ணன்
குமாரி நர்மதா, வயலின்
குருவாயூர் துரை, மிருதங்கம்

28—9—82 குமாரிகள் மதுஸ்ரீ ராம்ஜி
பூர்ணஸ்ரீ ராம்ஜி, பரதநாட்டியம்
(ஆசிரியை : உமா தண்டாயுதபாணி)

## நாதசுர இசைமணி
## திருச்சேறையார்
## சென்னையில்
## குடியேற்றம்



தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த பெரும் இசைக் குடும்பத்தைச் சேர்ந்தவர் நாதசுர கலைஞர் திருச்சேறை TVS சிவசுப்ரமணிய பிள்ளை புல்லாங்குழல் மேதை திருப்பாம்புரம் N. சுவாமிநாதன் அவர்களின் மருமகன் இவர் நாடுமுழுவதும், வட இந்திய நகரங்களிலும் இலங்கை, சிங்கப்பூர் முதலிய இடங்களிலும் பல ஆண்டுகளாக கச்சேரி செய்து வருபவர். சிக்கல் கந்தசஷ்டி விழாவில் 'இசை மணி' பட்டமும், திருநெல்வேலியில் 'ரஞ்சிதகான' என்ற பட்டமும், சென்னையில் 'ரத்னாகர' பட்டமும் பெற்றவர். தற்பொழுது அவர் சென்னையில் கீழ்க்கண்ட விலாசத்தில் குடியேறி உள்ளார். நிகழ்ச்சி விரும்புவோர் தொடர்பு கொள்ளலாம்.

திருச்சேறை TVS சிவசுப்ரமணிய பிள்ளை
35, வெங்கடேச நகர். இணைப்பு I.
விருகம்பாக்கம், சென்னை-92

## ராஜேந்தர் வழியில் கங்கை அமரன்

திரையுலகில் இளைஞரான T; இராஜேந்தர் கதை, வசனம், டைரக்ஷன, பாடல இசை அனைத்தும் தானே செய்து புரட்சி செய்தவர் புகழும் அடைந்தவர். இளையராஜாவின் இளவலும் இசையமைப்பாளரும் ஆன கங்கை அமரன் தற்பொழுது டைரக்ஷன் செய்ய ஆரம்பித்துள்ளார். பாவலர் கிரியேஷன்ஸ் தயாரிக்கும் 'கோழி கூவுது' என்ற திரைப் படத்திற்கு கதை, வசனம் பாடல், டைரக்ஷன் இவரே இசையமைப்பு மட்டும் அண்ணனுக்கு விட்டு கொடுத்துள்ளார். வேறு சில படங்களும் இவர் இவ்வாறு செய்ய உள்ளார். அதில் இசையமைப்பையும் ஏற்றுக் கொண்டு T. இராஜேந்தருக்கு சவால் விடலாம். அவருக்கு எங்கள் வாழ்த்துக்கள்.

